2nd July 1962]

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** ராசிபுரம் முனிசிபல் கமிஷனருக்கு இதைப்பற்றி தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறது அங்கிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. சோ. ஆறுமுகம் :** பனைமரத்துப்பட்டித் தண்ணீரை ராசிபுரத்திற்குக் கொண்டுபோகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அங்கேயுள்ள விவசாயிகள் அந்தத் தண்ணீரைப் பயன்படுத்த வேண்டாமென்று சொல்லியிருக்கிறார்களா ?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** அதைப்பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

*University colleges (opening)*

***86 Q.—Sri K. MOOKIAH THEVAR : Will the Hon.** the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any proposal from **the University for the establishment of Uuniversity Colleges in the** State; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**தீ விபத்துக்கள்**

***86-பி. கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60, 1960-61, 1961-62 ஆண்டுகளில் திருச்சி மாவட்டத்திலுள்ள பெரம்பலூர், முசிரி தாலுகாக்களில் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன ?

(இ) பெரம்பலூரிலாவது துறையூரிலாவது ஒரு தீயணைக்கும் படை வைக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*)—

| | 1959-60. | 1960-61. | 1961-62. |
|---|---|---|---|
| **Perambalur taluk** .. | 8 | 12 | 12 |
| **Musiri taluk** .. .. | 9 | 12 | 14 |

(*b*) **No, Sir.**

**திரு. து. ப. அழகமுத்து :** பெரம்பலூர் தாலுகாவிலும் முசிரி தாலுகாவிலும் அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்படுகின்றன. திருச்சி ஜில்லாவில் காவேரிக்குத் தெற்கேதான் தீயணைக்கும் படை வைக்கப்பட்டிருக்கிறது. தீ விபத்துக்கள் ஏற்படும் பொழுது, வெகு தூரத்திலிருந்து இந்தப் படை வரவேண்டியிருப்பதால், தீ அணைப்பதற்கு முடியாமல் போகிறது. ஆகவே காவேரிக்கு வடக்கேயும் ஒரு தீ அணைக்கும் படையை நிறுவ அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?